6th March 1958]

Scale Industrial Units, with all modern amenities like water and power-supply, etc. The factory units will be let out on rent to start with.

(*b*) The construction of buildings will be taken up immediately after the lands are acquired.

SRI S. LAZAR: May I know whether the lands have been acquired so far?

THE HON. SRI R. VENKATARAMAN: Sir, steps have been taken for the acquisition of land.

SRI A. A. RASHEED: Is there any proposal to start such Industrial Estates in other District Headquarters also?

THE HON. SRI R. VENKATARAMAN: We have a scheme for starting five such industrial colonies. We have already given the names of Marthandam, Tirunelveli, Madurai, Tiruchirappalli and so on.

SRI M. P. SUBRAMANIAM: இந்தத் தொழிற் பண்ணை ஆரம்பிக்கிற விஷயத்திலே எல்லா இடங்களுக்கும் சேவை செய்கிற முறையிலே, மையமாகப் பார்த்து ராஜ்யம் முழுவதும் பல அமைக்க ஏற்பாடு செய்வார்களா ? அப்படி ஒரு "Comprehensive scheme" ஐக் கொண்டு வருவார்களா ?

THE HON SRI R. VENKATARAMAN: இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே இப்பொழுது தொழிற்பண்ணைகள், காலனிகள், எல்லாம் சேர்த்து ஒன்பது வைக்கப் போகிறோம். அவற்றை ஜில்லா வாரியாக அமைத்துக் கொண்டிருக்கிறோம்.

*Official tours of Ministers*

* 223 *Q.*—SRI S. M. ANNAMALAI: Will the Hon. the Chief Minister be pleased to state whether Ministers participate in Congress Party meetings while touring on official business?

THE HON. SRI C. SUBRAMANIAM: Yes. Some of the Ministers participate occasionally in Congress Party meetings while on tour without detriment to their official work.

SRI S. M. ANNAMALAI: எல்லாக் கட்சி மக்களுடைய வரிப் பணத்தைக் கொண்டு மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் செய்கிறார்கள். ஒரு கட்சியின் வளர்ச்சிக்காக மக்களின் வரிப் பணத்தைப் பயன்படுத்தலாமா என்று கேட்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: மந்திரிகள் தனியாக காங்கிரஸ் வேலைக்கு என்று போனால் படி வாங்கிக் கொள்வது கிடையாது. வேறு காரியங்களுக்காகப் போகும்போது, இந்த மாதிரிக் கட்சிக் கூட்டத்திற்குப் போவது தவறு இல்லை என்பதைப்பற்றி பரிசீலனை செய்து, எந்தெந்த சமயங்களில் படி வாங்கலாம், எப்பொழுது வாங்கக் கூடாது என்பதற்கு விதிகள் கூட இருக்கின்றன.

SRI A. GOVINDASAMY: அமைச்சர்கள் அரசாங்க வேலையாகப் போகும்பொழுது, அவர்கள் தங்குகின்ற இடங்களிலே கட்சிக் கூட்டங்களை நடத்துகிறார்கள். இப்படிச் செய்வதால், எதிர்க்கட்சிக்காரர்கள் மந்திரிகளை

அணுகுவதற்கு இடையூறாக இருக்கிறது. தங்கி இருக்கின்ற இடத்தில் கட்சிக் கூட்டத்தை நடத்தாமல், கட்சிக்கு என்று தனியாக இருக்கும் இடத்தில் கூட்டத்தை நடத்துவார்களா ?

THE HON SRI C. SUBRAMANIAM : மந்திரியாக இருக்கிற காரணத்தினாலே, 24 மணி நேரமும் எல்லோரையும் பார்க்க வேண்டுமென்று சொல்வது முடியக்கூடிய காரியம் அல்ல. யார் வந்தாலும் சந்திப்பதற்கு சந்தர்ப்பம் கொடுக்கப்படுகிற சில சமயங்களில் கட்சி விஷயத்தையும், சொந்த விஷயங்களைப் பார்ப்பதற்கும் மந்திரிகளுக்கு சுதந்திரம் உண்டு என்றே நம்புகிறேன்.

SRI S. NAGARAJA MONIGAR : மந்திரிகள் எல்லாக் கட்சியினருக்கும் பொதுவானவர்கள். அப்படியிருக்கையில், அவர்கள் வெளியே செல்லுகின்ற பொழுது, எல்லாக் கட்சிக்காரர்களும் அவர்களை உபயோகித்துக் கொள்ளலாம். எந்தக் கட்சிக்காரர்களாவது அவர்களை உபயோகித்துக்கொள்ள வேண்டுமென்று கூப்பிட்டு, மந்திரிகள் வர முடியாது என்று தெரிவித்திருக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எங்களை அப்படி ஒருவரும் கூப்பிடமாட்டார்களென்று நினைக்கிறேன். (சிரிப்பு.)

SRI P. S. CHINNADURAI : அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது குறைந்தபட்சம் நிகழ்ச்சி நிரலையாவது காங்கிரஸ் கமிட்டிக்கு அனுப்புவதோடு, இதர கட்சி யூனிட்டுகளுக்கும் அனுப்ப ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லா அங்கத்தினர்களுக்கும் அனுப்பப்பட்டு வருகிறது.

SRIMATHI T. N. ANANDANAYAKI : மக்கள் வரிப்பணத்தை அமைச்சர்கள் காங்கிரஸ் கூட்டங்களிலே கலந்துகொள்ள பாழாக்கி விடுகிறார்களோ என்று அங்கத்தினர் பயப்படுகிறார். வரிப் பணத்தில் காங்கிரஸ் அனுதாபிகளும், காங்கிரஸ்காரர்களும் கொடுக்கும் பணம் அதிகமாக இருக்கிறது என்பதை உணருவார்கள் என்று கருதுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்கு குதர்க்கவாதமே அவசியமில்லை. எல்லோரும் சரி என்று சொல்லக்கூடிய முறையில்தான் நாங்கள் காரியங்களைச் செய்து வருகிறோம். மக்கள் செலுத்தும் வரிப்பணத்தை காங்கிரஸ் கட்சிக்காக எந்தக் காலத்திலும் உபயோகிக்க மாட்டோம் என்று உறுதியாகச் சொல்லுகிறேன்.

### *Handloom cloth*

* 224 *Q.*—SRI P. G. MANICKAM AND SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Central Government have decided to reduce the rebate given from the Handloom Cess Fund on the sale of handloom cloth from $1\frac{1}{2}$ annas to 1 anna ; and

(*b*) if so, whether the Government have made any representations to the Centre in this connexion?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) With effect from 1st December 1957, the rate of rebate on the wholesale and the retail sales of handloom cloth by co-operatives had been reduced from 9 nP. to 6 nP. in the rupee, by the Government of